உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

துன்முகி - கார்த்திகை - 2016 - நவம்பர் இதழ் - 53

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய செளந்தர்",
7G. ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்




# இறை வணக்கம்

அணிசுமந்த மயிலாளை ஆனந்த பைரவியை
ஆடகப்பொன் மேருமகள் ஆனாள் தம்மை
அரவசைசெஞ் சடையானை ஆர ணங்கள்
அறியானைத் தெளியானை அன்பி னாலே

மணிசுமந்த திருமார்பால் மருவியபா கீரதியை
மாமதுரை நாடாளும் மகிமை யாளை
மதிசுமந்த பெருமானை மறக்கா நெல்லை
மாதரசி மங்கலையை மலர்பாய் வைகைப்

பணிசுமக்க மண்சுமந்த பரமசிவன் பத்தினியைப்
பனிசுமந்த தலையனுக்கு மதுரை தந்த
பங்கயத்தை மலர்முகத்துப் பாவை யாளைப்
பாவலர்தம் கவிசுமந்த பான்மை யாளைக்

கண்சுமந்த கடவுளுடன் சமிவனத்தைக் காத்துவரும்
சங்கரியைத் திருநெல்லை என்னும் தாயைச்
சரிபாதி உடல்பெற்ற சார்பினாளைச்
சஞ்சலங்கள் அகலவெனச் சாற்று நெஞ்சே!

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

## ஆசியுரை

### சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

விவேகானந்தர் கல்வி என்பது தகவல்களைச் சேகரிப்பது அல்ல. மனத்தெளிவைப் பெறுவதுவே மிக முக்கியம் எனறு கூறுகிறார். மனத்தெளிவைப் பெற்று விட்டால் அதன் காரணமாக எவ்வளவு தகவல்களை வேண்டுமானாலும் சேகரிக்கலாம். சிறு குழந்தைகளுக்குக் கூட, தான் கற்கின்ற பாடலோ, உரைநடையோ, அதனைத் தெளிவாக, புரிந்து கொண்டு மனதில் பதித்துக்கொண்டால் தான் அவை பயன்படும். மேலும், வளர்ச்சியின் காரணமாகத் தகவல்களை உடனடியாகக் கணினி மூலமாகத் தெரிந்து கொள்ளலாம். அவற்றைப் பகுத்துப் பார்த்து நல்லவற்றை ஏற்றுக்கொள்ளத் தெளிவு மிக அவசியம்.

புத்தரும், சீடர் ஆனந்தாவும் காட்டு வழியே சென்று கொண்டிருந்தனர். அப்பொழுது ஒரு சிறு நீர் நிலையைக் கடந்து சிறிது தூரம் சென்ற பின் சீடனைப் பார்த்து "அப்பா! எனக்குத் தாகம் அதிகமாக இருக்கிறது. சோர்வாகவும் இருக்கிறது. சற்று முன் நாம் கடந்து வந்தோமே, அந்த ஓடைக்குச் சென்று குடிப்பதற்கு நீர் கொண்டு வா" என்று அனுப்பி வைத்தார். சீடனும், அந்த ஓடைக்குச் சென்றார். ஓடையில் தண்ணீர் தெளிவாக இருந்தது. ஆனால், இவர் நெருங்கியதும் ஒரு மாடு அதனைக் கடந்து வெளியேறியது. அதனால், தண்ணீர் மிகக் கலங்கி, குடிப்பதற்கு ஏற்ற நிலையில் இல்லை. எனவே, சீடர் புத்தரிடம் திரும்பி வந்து, சுவாமி அந்த ஓடையில் தண்ணீர் குடிப்பதற்கு ஏதுவாக இல்லை. கலங்கி விட்டது. சிறிது தூரத்திலே மற்றொரு ஓடை இருக்கிறது. அங்குத் தண்ணீர் நன்றாக இருக்கும் என்று சொன்னார். அதனை ஒப்புகொள்ளாத புத்தர், நீ பார்த்த நீரோடையில் தான் தண்ணீர் கொண்டு வர வேண்டும், அவசரமில்லை என்று அனுப்பி வைத்தார். திரும்பி வந்த சீடர், கலங்கல் சிறிது அடங்கிக் கொஞ்சம் தெளிவாக இருப்பதைக் கண்டார். ஆனாலும் அப்போது தண்ணீர் குடிப்பதற்குத் தக்க நீராக இல்லை. குருவின் சொல்லை மீற முடியாத சீடர் ஓடைக்கரையில் அமர்ந்து அமைதியாகத் தெளிவடைந்து. மேலே உள்ள நீர் ஸ்படிகம் போலத் தெளிவாக

இருப்பதையும் பார்த்தார். தண்ணீரைக் கொண்டு வந்த சீடர் புத்தருக்குத் தந்து, அவரை சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்து, குருதேவா ஓடையிலே தண்ணீர் எடுத்து வரச்சொன்னது எனக்கு அறிவு புகட்டுவதற்கு என்பதைப் புரிந்து கொண்டேன். மனத்திலுள்ள கலக்கங்களை அகற்றி, தெளிவைப் பெறுவதற்கு, முயற்சியும், பொறுமையும் வேண்டும் என்பதைப் புரிந்து கொண்டேன். மேலே சொன்ன உதாரணத்திலே, மனத்தெளிவு பெறுவது எல்லோருக்கும் மிக்க அவசியம். ஆன்மீக வாதிகளுக்கு மிக மிக அவசியம் என்பது புரியும்.

இப்பொழுது தற்சமயம் சிகிச்சைக்குப் பின் என்னுடைய பழக்கங்கள் ஒரு நேரக் கட்டுப்பாட்டுக்குள் வந்துள்ளது. காலை எழுந்து முறையாக நடைப்பயிற்சி, தியானம், மூச்சுப்பயிற்சி, சுவாசத்தைத் தூய்மைப் படுத்துகின்ற மருந்துப் பிரயோகங்கள், இதயத்திற்கு வேண்டிய மருந்துகள், நேரப்படி சாப்பிட்டு, நேரத்திற்கு மூன்று வேளை உணவு உட்கொண்டு, மேலும் ஓய்வுப் பயிற்சிகளையும், அவற்றிற்குரிய நேரங்களிலே, அவற்றைச் செய்வதினாலே என்னுடைய உள்ளம் அதிகத் தெளிவைப் பெற்றிருக்கிறது. சினம், உணர்ச்சி வசப்படுதல் குறைந்திருக்கிறது. எனவே, பயிற்சியும், பொறுமையும் கொண்டு நம்முடைய மனதைத் தெளிய வைத்துக் கொண்டால் கிடைக்கின்ற தகவல்களைப் பகுத்துச் சேகரிக்கவும், ஒதுக்கவும் இயலும். சேர்க்கின்ற தகவல்களைச் சேமிப்பதற்கு நம்முடைய தெளிவான மனத்திலே இடமும் இருக்கும். எனவே, மனத்தெளிவைப் பெறுவோமாக!

*ஸ்ரீ சற்குருநாதன் துணை*

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)

அப்படியானால் இறைவன் எங்கிருப்பான். இது போல்தான் இரணியன் தன்மகன் பிரகலாதனை நோக்கி நீ கூறிய பெயருடையவன் எங்குள்ளான்? என்று வினவிய போது பிரகலாதன் தந்தையை நோக்கி இறைவன் தூணி லுளன் இந்தத் துரும்பிலும் உளன். நீ தொட்ட தொட்ட இடமெலாம் தோன்றுவான். அங்ஙனம் தோன்றானாயின் நீ என்னை வெட்டுதி என்று சொன்னான். உடனே இரணியன் தூணை உதைக்கத் திருமால் நரசிங்கமாக அதாவது புருஷா மிருகமாகத் தோன்றிக் கனகனை மாய்த்தான் என்ற கதையைக் கம்பராமாயணம் கூறும். இறைவன் எங்குள்ளான்? என்று வினவுவோர் வினாவிற்குப் பதிலாகச் சொல்லுவது இறைவன் எங்கு முளன் என்பதே. இறைவன் இல்லாத இடமே இல்லை என்பது அடியார்களின் முடிந்த முடிபு.

அதுபோலத்தான் பட்டினத்தாரும் பேசுகின்றார். சொல்லிலும் அச் சொல்லின் முடிவிலும் நான்மறையிலும் இருளிலும் குறையில்லா வானிலும் ஆய்ந்தறிந்தோர் உள்ளங்களிலும் தன்பால் அன்புகொண்டார் நெஞ்சங்களிலும் இருப்பானே தவிரக் கல்லிலும் செம்பிலும் இருப்பான் எங்கள் கண்ணுதலே என்று விடை கூறுமுகத்தான் கூறுகின்றார் பட்டினத்தார்.

***சொல்லினும் சொல்லின் முடிவினும் வேதச் சுருதியினும்***
***அல்லினும் மா(சு) அற்ற ஆகாயம் தன்னினும் ஆய்ந்துவிட்டோர்***
***இல்லினும் அன்பர் இடத்தினும் ஈசன் இருக்குமிடம்***
***கல்லினும் செம்பினு மாஇருப் பான்எங்கள் கண்ணுதலே***

அடுத்து வினை என்பது என்ன? அந்த வினை நீங்கின் உண்டாகும் பயன் என்ன? அவ்வின நீங்க நாம் என்ன செய்ய வேண்டும்? என்பதைச் சொல்ல வருகிறார் பட்டினத்தார். தேகம் என்பது வினையால் தோன்றும் போகம் ஆகும். அது நாம் அனுபவிக்கும் சிற்றின்பங்களால் தோன்றுவது. அந்த இன்பங்களை

நீக்கினால் தினைப்பொழுதும் வினை நில்லாது. வினை நீங்க வேண்டுமானால் சிவன்பாதத்தை நினைக! இல்லையாயின் அவ்வாறு நினைப் போரைச் சென்று சேர்க. அப்படி நினைப்பவரையும் நீங்கி வீணே நின்றால் உன்னைப் போலக் கீழான ஒருவர் உண்டோ? அப்படி நினைக்கின்றவர் ஒருவர் உற்றவராக வரும்போது மனமே! அவரை நினைவாய்.

*வினைப்போக மேஒரு தேகம்கண்டாய்? வினைதான் ஒழிந்தால்*
*தினைப்போ(து) அளவும்நில் லாதுகண்டாய்! சிவன்பாதம்நினை*
*நினைப்போரை மேவு நினையாரை நீக்கிஇந் நெறியில் நின்றால்*
*உனைப்போல் ஒருவர்உண் டோமனமே எனக்(கு) உற்றவரே*

அடுத்து மங்கையர்பால் மனம் வைத்து மயங்கிக் கிடப்பின் என் ஆகும்? என்பதை விளக்குகிறார். பொதுவாகப் பெண்டிரை அழகு படுத்தி மகிழ்வார் அந்த நிலையாத இன்பத்தை நிலையென்று கருதி மாயவலையில் அகப்பட்டு மயங்கும் நெறியை மறந்து சிவனடியைச் சேர்வது எந்நாள்? என்பது அவர் வினா பட்டுத் துணியை வாங்கி அளவுக்குத் தக்கபடி கிழித்துப் பெரிய ஊசி கொண்டு தைத்துச் சுருட்டி, குழல்கள் நிறைந்த என்மனைவிபாற் கொடுத்து அதனைக் கட்டச் சொல்லி அவ்வாறு கட்டிவந்து நம்மை மயக்கும் பெரியமாயக் காரியின் காமத்தை எல்லாம் விட்டுப் பிரிவது எக்காலம். சிவனே நான் மீள்வது எக்காலம்? தெரியவில்லை என்பது குறிப்பு.

*பட்டைக் கிழித்துப் பருவூசி தன்னைப் பரித்தெடுத்து*
*முட்டச் சுருட்டிஎன் மொய்குழ லாள்கையில் முன்கொடுத்துக்*
*கட்டி இருந்த கனமாயக் காரிதன் காமம்எல்லாம்*
*விட்டுப் பிரிய என்றோ? இங்ஙனே சிவன்மீண்டதுவே*

பட்டினத்தார் துறவு பெறுமுன் இல்லறத்தவராய்த் திருவெண்காடர் என்ற பெயரில் இருந்த போது பிள்ளையின்றி வருந்திய அவருடைய வருத்தம் போக்கத் திருவிடைமருதூர் இறைவனாகிய மருதவாணர் அவருடைய கலி தீர்க்க எண்ணி அங்கு அடியவர்க்கு உணவிடும் வழக்கம் உடைய ஒருசிவாச்சாரியார் கைப்பொருள் இன்றி வருந்தியிருக்க அவ்வருத்தம் போக்கவும் எண்ணங் கொண்டு அவர்

கனவினில் தோன்றி நாளை நாம் ஆலயக் குளக்கரையில் குழந்தையாகக் கிடப்போம்; நீ அக்குழவியை எடுத்துக் கொண்டு காவிரிப்பூம்பட்டினம் சென்று திருவெண்காடரை எடைக்கு எடை பொன் பெற்றுக் கொண்டு கொடு என்று ஆணையிட்டு மறைந்தார். அதன்படி மறுநாள் உதயத்தில் ஆலயக் குளத்தருகே கிடந்த குழவியைத் திருவெண்காடர் பால் கொடுத்து எடைக்கு எடை பொன்பெற்று மீண்டார். அவரை நன்கு வளரத்து வந்து திருவெண்காடர் அவரைத் தம் குலவழக்கப்படி கடல் கடந்த வாணிகம் பயின்றுவர அனுப்பினார். திரவியம் தேடித் திரும்பி வந்தார் மருதவாணர். அவ்வாறு வந்த மருதவாணர் கணக்கரிடம் கொண்டு வந்த பொருள்களைப் பண்டகசாலையில் சேர்க்கச் சொன்னார். திருவெண்காடர் அவர் கொண்டு வந்த பெட்டிகளைப் பிரித்த போது அதில் எருவும் பிற வேண்டாப் பொருள்களும் கிடந்தன. திருவெண்காடர் அவரைக் கடிந்து கொள்ள நாம் உமக்கு நிலையாப் பொருளை விடுத்து நிலைத்த பொருளைத் தந்தோம் என்று கூறிவிட்டு இல்லம் சென்று ஒரு வரியில் ஒரு தொடர் எழுதிய ஏடு ஒன்றையும் காதற்ற ஊசி ஒன்றையும் ஒரு பெட்டியில் வைத்துத் தாயை நோக்கித் தந்தை வந்ததும் அவர் கையில் கொடுங்கள் என்று கூறிவிட்டு வெளிச் செனறு அப்படியே மறைந்து போனார்.

மருதவாணர் இல்லம் சென்றபின் அவர் கொண்டு வந்த மூட்டைகளை அவிழ்த்துப் பார்த்த போது அம்மூட்டையிலிருந்து கொட்டிய விராட்டிகளை உடைத்த போது பொன் மணி இரத்தினம் முதலியவை இருக்கக் கண்டு திடுக் கிட்டு இல்லத்திற்கு ஓடித் தன்மனைவியை நோக்கி எங்கே மருதவாணன்? இங்கு வந்தானா? என்று வினவ அம்மையார் மருதவாணர் கொடுத்த சிறிய பெட்டியை அவரிடம் கொடுத்தார். காதற்ற ஊசியும் வாராதுகாண் கடைவழிக்கே என்ற தொடரைக் கண்டு அதன் உட்பொருளை உணர்ந்து அப்பொழுதே துறவேற்றார். சட்டை கழன்றது சம்சாரம் விட்டது என்று கூறி வெளிச் சென்றார். சென்றவர் மீண்டுவரவில்லை. தன் கணக்கர் சேந்தனாரை அழைத்தார். விலை மதிப்பற்ற செல்வங்கள் அனைத்தையும் சூறையிடச் செய்தார். ஊர்ப்பெரும் மக்கள் பலரும் மன்னவனும் திருவெண்காடர் இருந்த காட்டிற்குச் சென்று அவரை

அழைத்தனர். அவர் வரமறுத்தார். இப்படித் துறவு பூண்டமையால் உங்களுக்கு உண்டான பயன்தான் யாது? என்று வினவினர். திருவெண்காடர் அரசரை நோக்கி உம் அவைக்கு நாம் வந்த போது நின்றோம். நீர் அமர்ந்திருந்தீர். இன்றோ நீர் நிற்க நாம் அமர்ந்துள்ளோம். இதுதான் நான் ஏற்ற துறவின் பெருமை என்றார். இந்த நிகழ்வைத்தான் கீழ்வரும் பாடல் சொல்கின்றது.

*சூதுற்ற கொங்கையும் மானார் கலவியும் சூழ்பொருளும்*
*போதுற்ற பூசலுக் கென்செய்யலாம் செய்த புண்ணியத்தால்*
*தீதற்ற மன்னவன் சிந்தையில் நின்று தெளிவதற்கோ*
*காதற்ற ஊசியைத் தந்துவிட்டான் என்றன் கைதனிலே.*

சூதாடும் காய் போல அமைந்துள்ள மார்புடைய கன்னியரைச் சேரும் சேர்க் கைக்கும் நம்மைச் சுற்றிச் சூழும் பொருளுக்கும் ஆசையுற்று அலையும் போது உண்டாகும் பூசலுக்கும் நாம் என்ன செய்யலாம்? நான் முன்னர்ச் செய்த புண்ணியத்தால் இவற்றின் மேலுற்ற விருப்பு நீங்கவும் தீது இல்லா மன்னவனாகிய இறைவனின் சிந்தையில் நின்று தெளிவதற்கோ காதற்ற ஊசியை என்கையினிலே தந்து விட்டானோ? என்று எண்ணுகிறார். காதில்லா ஊசியில் நூலைக் கோக்க முடியாது. அது பயனற்றதாகும். காதற்ற ஊசி அவர் வாழ்வை மாற்றியதால் மேலே சொன்ன பாடல் போக மேலும் இரு பாடல்களில் அதனையே பாடுகிறார்.

*வாதுற்ற திண்புயர் அண்ணாமலையார் மலர்ப்பதத்தைப்*
*போதுற்ற எப்போதும் புகலுநெஞ்சே! இந்தப் பூதலத்தில்*
*தீதுற்ற செல்வமென்? தேடிப் புதைத்த தீவினையென்?*
*காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே*

வலிய புயத்தை உடைய அண்ணாமலையாரின் மலர்ப் பாதங்களை நேரம் கிடைத்த பொழுதெல்லாம் நெஞ்சே! அவன் திருநாமத்தைக் கூறுக! இவ்வுலகில் தீமைதரும் செல்வங்களால் என்ன பயன் ? நம்மைப் பிடித்த தீவினைகள் நீங்கி என்ன பயன்? காதற்ற ஊசி கடைசிவரை பயன் தராது. இதன் உட்பொருள் இறைவன் திருநாமத்து எழுத்தைந்தும் ஓதுவதே என்பதுதான்.

*(தொடரும்....)*

## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

## வெள்ளியம்பலத் திருக்கூத்து ஆடியது

பரஞ்சுடராகிய சிவபெருமான் உலகினை நடாத்துவதற்கான அறம், பொருள், இன்பமானவற்றை நிலை நாட்டும்பொருட்டே சுந்தரபாண்டியனாக வந்தருளித் திங்கட் குலமணியான தடாதகைப் பிராட்டியாரைத் திருமணம் செய்துகொண்டார். பின்பு திருமணத்திற்கு வந்திருந்த தேவர்களையும், மகரிஷிகளையும், மன்னர்களையும் ஏனையோர்களையும் நோக்கி, அமுது செய்ய வருக என்று திருவாய் மலர்ந்தருளினார். அவர்கள் அனைவரும் விரைந்து பொற்றாமரைத் திருக்குளத்திலே நீராடிவிட்டுத் தங்கள் நியமங்களை முடித்துத் திரும்பினர்.

அது சமயம் பதஞ்சலி மகரிஷியும் வியாக்கிரபாத மகரிஷியும் சுந்தரப் பெருமானை அடிபணிந்து வணங்கி, கருணாமூர்த்தியே ! பொன்னம்பலத்திலே தேவரீர் ஆடியருளும் திரு நடனத்தைத் தரிசனம் செய்த பின்பே உணவு கொள்வது அடியவர்களான எங்கள் நியமம் என்று விண்ணப்பித்துக் கொண்டார். அடியார்களின் எண்ணத்தை அப்படியே நிறைவேற்றி வைக்கும் அண்ணல் சிவபெருமான், அதே நடனத்தை யாம் இம் மதுரையம்பதியிலே நடித்துக் காட்டுவோம். உலக வடிவாகிய விராட்புருஷனுக்குத் தில்லையம்பதி இருதயம்; மதுரையம்பதி துவாதசாந்த ஸ்தானம் ஆகும் என அருளினார். தெய்வப் பேரரசே ! ஏனைய அங்கங்கள் எவை? என்று இரண்டு ரிஷிகளும் வினவினர். சுந்தர பாண்டியர் மிகுந்த பணிவுடன் திருவாரூர் மூலாதாரம்; திருவானைக்கா சுவாதிஷ்டானம்; திருவண்ணாமலை மணிபூரகம், தில்லை; அநாகதம்; திருக்காளத்திவிசுத்தி; காசி ஆஞ்ஞை, திருக்கயிலாயம் பிரம்மாந்திரம் ஆகும். மதுரையம்பதி துவாதசாந்த ஸ்தலம். இத் திருப்பதி எவ்வகையில் மேலாகியது எனில் எல்லாவற்றுக்கும் முன்னால் தோன்றிய முறையாலே என்று திருவாய் மலர்ந்தருளி இரு பெரு முனிவர்களுடன் திருக்கோயிலுள் புகுந்தருளினார்.

சுந்தரப் பெருமானின் இச்சா சக்தியானே இந்திர விமானத்தின்

கீழ்ப்பகுதியில் வெள்ளியம்பலம் ஒன்று தோன்றியது. அவ்வம்பலத்தினிடையே மாணிக்கப் பீடம் ஒன்றும் தோன்றியது. அம் மணிப்பீடத்தின் மேலேறி நின்ற சுந்தரப் பெருமான் மெஞ்ஞானப் பேரொளி வடிவமாக நின்றார். சிவகணங்கள் மொந்தை தண்ணுமைகளை முழக்கினர். நந்திகேசுரர் மத்தளம் கொட்டினார். திருமால் இடக்கை முழக்கினார். தும்புருநாதர் இருவரும் இசை பாடினர். சரஸ்வதி தேவி சுருதி கூட்டினார். தூக்கிய இடது திருவடி குவிந்த செந்தாமரை மலரை நிகர்த்திருந்தது. வலக்கரங்கள் ஐந்திலும் அபயஹஸ்தத்திலே திரிசூலமும் ஏனை நான்கு திருக்கரங்களிலே உடுக்கை, அம்பு, வாள், மழு முதலியன இலங்கின. இடக்கரங்கள் ஐந்திலே வரதஹஸ்தத்திலே நாகமும் ஏனைய நான்கு கரங்களிலே அக்னி, வில், கேடயம், கதை முதலியனவும் இலங்கின. திருநீல கண்டமும், சங்ககுண்டலம் பூண்ட திருச் செவியும், விரித்த செஞ்சடையும், வெண்ணீறு துலங்கும் திருமேனியும், விரிகமல நயனங்கள் மூன்றும், பாம்புக்கச்சையும், நீலமேனி வாலிழை பாகமும், உமையம்மையார் மேல் வைத்த திருப்பார்வையும் திருநகையும் தோன்றத் திருநடனம் செய்தருளினார் சுந்தரப் பெருமான். அதுபோழ்து கங்கையாறு பாயும் ஒலியும், மங்கல டமருகத்தின் ஒலியும் மந்திர ஒலியும், வேதத் தொலியும், அங்கைத்தீயின் ஒலியும், திருவடிச் சிலம்பின் ஒலியும் ஆகிய அனைத்தும் ஒன்றுகலந்து எங்கும் பரவியது. அடியவர்களின் இரு செவிகளும் ஒலியின்னமுதைப் பருகின.

இவ்விதமாகச் சிவபெருமான் வெள்ளியம்பலத் திருநடனம் ஆடியருளியதைப் பதஞ்சலி வியாக்ரபாதர் இருவரும் கரங்களைத் தலைமேல் கூப்பித் தரிசித்துத் திருவடியில் வீழ்ந்து வணங்கினார்கள். வேத கீதங்களால் மனமார நாவாரப் போற்றிசெய்து பேரின்பக் கடலுள் மூழ்கி அன்பு மயமானார்கள். மகரிஷிகளின் பொருட்டு ஆடிய திருநடனத்தைத் தேவர்கள், முனிவர்கள், யோகியர் கந்தருவர், கிம்புருஷர், அவுணர்கள் எல்லாரும் தரிசித்து வணங்கினர். பதஞ்சலிமாமுனிவர் சிவானந்தத்திலே மூழ்கிவிட்டார். ஆனந்தக் கண்ணீர் அருவி சோர இறைவனைப் பலபடியாகத் தோத்திரம் செய்தார்.

வெள்ளியம்பலக் கூத்தாடும் சுந்தரேசர் இருமாமுனிவரையும் நோக்கி, நல்லது நீங்கள் இருவரும் விரும்பியது யாது? என்று வினவியருளினார். எந்தையீர் ! இத் தெய்வத் திருநடனம் எப்போதும் இவ் வெள்ளியம்பலத்துள்ளே நிலைத்து நிற்கவேண்டும். இத்திருக்காட்சி கண்டவர் பாசபந்தங்கள் விலகட்டும். அருள் புரிந்திடுக என்று வேண்டினர் இருவரும். நடராசப் பெருமானும், செந்தமிழுக்கு இருப்பிடமான இப் பாண்டிக் கன்னிநாடு செய்த தவம் காரணமாக நீங்கள் கோரிய வரத்தை அளித்தோம் என்று திருவாய் மலர்ந்தருளினார்.

சிவகணத்தார் கைகோத்துக் கூத்தாடினர். தேவர்கள் பூமழை பொழிந்தனர். முனிவர்கள் ஆனந்தக் கண்ணீர் உகுத்தனர். அன்புருவாகத் திகழ்ந்த பதஞ்சலி, வியாக்கிரபாதர் இருவரையும் துதிசெய்து உவகையுடன் தழுவிக் கொண்டனர்.

## குண்டோதரனுக்கு அன்னம் இட்டது

தடாதகைப் பிராட்டியார் தமது திருமணத்திற்கு வந்திருந்த மாதவர்கள், மறையவர்கள், பல நாட்டு அரசர்கள் எல்லார்க்கும் முறையே பொற்பாத்திரங்களிலே அறுசுவை உண்டியை உண்பித்து, சந்தனம், பட்டாடை, ஆபரணம், தாம்பூலம் மற்றும் ஏனைய பொருள்களும் முறையாக அளித்து உபசாரம் செய்து ஐம்பத்தாறு நாட்டு வேந்தர்கட்கும் மற்றவருக்கும் விடை கொடுத்து அனுப்பினார். அதுசமயம் சமையல் தொழில் செய்வோர் வந்து தேவியின் திருவடி வணங்கி, தாயே ! அடியவர் சமைத்த அன்னத்திலே ஆயிரத்தில் ஒரு பங்கு கூடச் செலவாகவில்லை. நாங்கள் என்ன செய்ய வேண்டும்? என வினவினர். பிராட்டியார் எழுந்து பெருமான் முன் வந்து வணங்கி ஒரு பக்கத்தில் நின்று, தேவரீர் ! தங்களுடன் முப்பத்துமுக்கோடி தேவர்களும் வருவர் என்று எண்ணிச் சுவையுணவு அளவற்றதாக ஆக்கச் செய்தோம். எஞ்சியுள்ள அன்னமோ இமயமலையளவு குவிந்துள்ளது. அன்னத்துக்கேற்பச் சமைத்த காய்கறிகளும் சுற்றச் சூழவிருக்கும் சிறு மலைகளைப்போலக் குவிந்து கிடக்கின்றன என்று கூறினார்.

சுந்தரப்பாண்டியப் பெருமான் அதனைக் கேட்டு, தேவியாரிடத்துத் தான் கொண்ட அன்பின் விளைவாக ஒரு திருவிளையாடல் புரியத் திருவுளம் கொண்டார். தனக்குத் திருக்குடை ஏந்தும் பூதகணத் தலைவன் குண்டோதரனது பேராற்றலையும் உலகறியச் செய்ய விரும்பினார்போலும். தேவியை நோக்கிக் குறுநகை செய்து, வேந்தரில் சிறந்த பாண்டியகுமாரியே ! உனக்குப் பணிபுரிய தேவலோகத்துப் பஞ்சதருக்களும் உன்னகத்தே உள்ளன. அளவற்றதான உனது செல்வப் பெருக்கின் பெருமையை நாம் அறியுமாறு செய்தாய் போலும். உனது பெரு விருந்தினை உண்ண நம் கணத்துள்ளே பசியால் வருந்துபவர் யாரையும் காணோம் என்று சொல்லிவிட்டு அருகிலே நின்றிருந்த குண்டோதரனது வயிற்றிலே வடவாக்கினி புகுமாறு திருவுளம் கொண்டார். வடவைத்தீ வயிற்றினுள் புகுந்து வருத்தியதால் குண்டோதரன் தளர்ந்து உயிரொடுங்கிச் சிவபெருமானை நோக்கி, பெருமானே! பெரும் பசி என்னை வருத்துகின்றது என்று இரங்கினான். சிவபெருமான் தமது பிராட்டியாரை நோக்கி, எமக்குக் குடை பிடிக்கும் குட்டைக்கால் பூதத்திற்குப் பிடிசோறு கொடுப்பாயாக; அப்புறம் கூறுகின்றேன் என்று கூறியருளினார். பிராட்டியார் பெருமானை வணங்கி விடைபெற்றார். பசித்தீயினால் வருந்திய குண்டோதரனும் உடன் சென்றான்.

அரசியாரின் ஏவலுக்கிணங்கச் சேவகர் பெரும்பசிக் குண்டோதரனை இட்டுச் சென்று சோற்று மலையின் முன்பு கொண்டுவிட்டனர். குண்டோதரன் சோற்றை எடுத்ததையோ உண்டதையோ யாவரும் காணவில்லை. அன்ன மலை மறைந்து விட்டது - ஏவற்பெண்டிர் கைநெரித்து வியப்புக் காட்டினர். சிலர் பயந்தனர். சிலர் ஓடினர். சிலர் கண்களைப் பொத்திக் கொண்டனர். பின்னர் அப்பூத குண்டோதரன் காய்கறி வகைகள் நெய், பால், தயிர், தேன் எல்லாவற்றையும் உண்டு தீர்த்தான். மேற்கொண்டு பலவகைப் பழங்கள், பணியாரங்கள், கரும்புகள், தேங்காய், வேகாத காய்கறிகள், அரிசி, நவதானியங்கள் அனைத்தையும் தனது கையால் வாரி வாரி எடுத்துத் தனது பெருவயிற்றினுள் அடைத்துக் கொண்டான். இதையெல்லாம் கேட்டும் கண்டும் தெரிந்த தடாதகை தேவியார் அதிசயம் அடைந்தார்.

தனது இன்ப அன்பு நாயகனிடம் சென்று நாணத்துடன் தலை கவிழ்ந்து நின்றார் தேவியார். அவளது நிலை தெரிந்த சோமசுந்தரக் கடவுள் தேவியைப் பார்த்து விளையாட்டாக, நான் அனுப்பிய பூதம் உண்டு மீதம் இருக்குமானால் மேற்கொண்டு சில பூதங்களை அனுப்புவேன் என்றார். பிராட்டியார், ஐயனே! தேவரீர் அனுப்பிவைத்த பூதம் வெந்தது வேகாதது அனைத்தையும் உண்டுவிட்டது. மேற்கொண்டு பூதங்களை அனுப்பினால் உலகத்தையே விழுங்கிவிடுவார்கள். பிறகு தங்களது யுகாந்தகால ருத்திரர் என்ற பெயர் உறுதியாகவிடும் என்று பணிவுடன் கூறினார்.

அது சமயம் பெரும்பசித்தீ வருத்தக் குண்டோதரன் வந்து, வெள்ளியம்பலத்திலே திருநடனம் செய்த சுந்தரக்கடவுளே ! மலையெனக் குவிந்திருந்த அன்னம் உண்டும் என்பசி தீரவில்லை, எனக்கு ஒன்றும் தெரியவில்லையே என்ன செய்யட்டும்? என்று கதறினான்; புலம்பினான்; பெருமூச்சுவிட்டான்; ஆவி சோர்ந்து அயர்ந்தான்.

***(ஆதாரம் : புலவர் மணி எழுதிய திருவிளையாடற்புராணம் வசனம்)***

***(தொடரும்...)***

## திருக்குறள் தெளிவுரை

**(ம. கார்மேகம்)**

### விருந்தோம்பல்

விருந்தினரை வரவேற்றுப் பேணுதல்

**1. இருந்து ஓம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி**
**வேளாண்மை செய்தல் பொருட்டு.**

இல் இருந்து ஓம்பி - வீட்டில் இருந்து பொருள்களைப் பாதுகாத்து வாழ்வது எல்லாம் - வாழ்கின்ற முறைமை எல்லாம் ; விருந்தோம்பி - வீட்டிற்கு வருகின்ற விருந்தினரைப் பேணி ; வேளாண்மை செய்தல் பொருட்டு - உதவி செய்தலுக்கே ஆகும்.

வீட்டில் உள்ள பொருள்களைப் பாதுகாத்துக் கொண்டு இல்லறத் துணையோடு வாழ்கின்ற வாழ்க்கை முறைமை எல்லாம் தம் வீட்டிற்கு

வருகின்ற விருந்தினரைப் பேணி அவர்களுக்கு உதவி செய்தலுக்கே ஆகும்.

இருந்து, ஓம்பி - வினைஎச்சம் ; எல்லாம் - முற்றும்மை

**2. விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்து எனினும் வேண்டற்பாற்று அன்று.**

விருந்து - விருந்தினர் ; புறத்ததா - வீட்டின் புறத்தே இருக்க ; தானுண்டல் - தான்மட்டுமாகத் தனித்திருந்து உண்ணுதல் ; சாவா மருந்து எனினும் - சாவாமைக்குக் காரணமாக உள்ள மருந்தே என்றாலும் ; வேண்டற்பாற்றன்று - அதனை உண்ண விரும்புதல் முறையில்லை.

சாவாமைக்குக் காரணமான மருந்தே என்றாலும் வீட்டின் புறத்தே விருந்தினர் காத்திருக்க அம்மருந்தைத் தான் மட்டும் தனித்து உண்ண விரும்புதல் முறையில்லை.

உண்டல் - தொழிற் பெயர் ; சாவா மருந்து - நான்காம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை.

**3. வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுதல் இன்று.**

விருவிருந்து - தன்னை நோக்கி வருகின்ற விருந்தினரை ; வைகலும் - நாள்தோறும் ; ஓம்புவான் வாழக்கை - பேணிக் காப்பவனின் வாழ்க்கை ; பருவந்து - வறுமையுற்று ; பாழ்படுதல் இன்று - கெடுதல் இல்லை.

தன்னை நோக்கி வருகின்ற விருந்தினரை நாள்தோறும் பேணிக்காப்பவனின் வாழ்க்கை வறுமை அடைந்து கெடுவது இல்லை.

வருவிருந்து - வினைத்தொகை
ஓம்புவான் - வினையாலணையும் பெயர்.

**4. அகன்அமர்ந்து செய்யாள் உறையும் முகன்அமர்ந்து
நல்விருந்து ஓம்புவான் இல்.**

அகன் அமர்ந்து - உள்ளம் மகிழ்ந்து ; செய்யாள் - செந்தாமரை மலரில் அமரும் திருமகள் ; உறையும் - தங்குவாள் ; முகன் அமர்ந்து - முகம் மலர்ச்சியுடன் விரும்பி ; நல்விருந்து - நல்ல விருந்தினரை ; ஓம்புவான் இல் - பேணுகின்றவனின் இல்லத்தில்.

தன் இல்லத்திற்கு வரும் நல்ல விருந்தினரை முக மலர்ச்சியுடன் விரும்பிப் பேணுகின்றவனின் இல்லத்தில் திருமகள் உள்ளம் மகிழ்ந்து விரும்பித் தங்குவாள்.

நல்விருந்து - பண்புத் தொகை.

**5. வித்தும் இடல்வேண்டும் கொல்லோ விருந்தோம்பி**
**மிச்சில் மிசைவான் புலம்.**

வித்தும் இடல்வேண்டும் கொல்லோ - விதையையும் விதைக்க வேண்டுமோ? ; விருந்தோம்பி - விருந்தினரைப் பேணிப் பாதுகாத்து ; மிச்சில் - அவரை உண்ணச் செய்து எஞ்சியதை ; மிசைவான் புலம் - உண்ணுகிறவனின் நிலத்தில்.

தன் இல்லத்திற்கு வரும் விருந்தினரைப் பேணி அவரை உணவு உண்ணச் செய்து எஞ்சியதைத் தான் உண்ணும் ஒருவனுடைய நிலத்தில் விதையும் விதைக்க வேண்டுமோ? வேண்டியதில்லை.

வித்தும் - எச்ச உம்மை ; கொல் - அசைநிலை ; ஓ - வினாப் பொருளில் வந்தது.

**6. செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான்**
**நல்விருந்து வானத் தவர்க்கு.**

செல்விருந்து - செல்லும் விருந்திரை ; ஓம்பி - பேணி ; வருவிருந்து - வரவிருக்கின்ற விருந்தினரை ; பார்த்திருப்பான் - எதிர்பார்த்துக் காத்திருப்பவன் ; நல்விருந்து - நல்ல விருந்தினன் ; வானத்தவர்க்கு - வானுலகத் தேவர்களுக்கு.

தன்னுடைய இல்லத்திற்கு வந்து செல்லும் விருந்தினரைப் பேணி இனி வர விருக்கின்ற விருந்தினரை எதிர்பார்த்துக் காத்திருந்து பேண விரும்புபவன் வானுலகத் தேவர்களுக்கு நல்ல விருந்தினன் ஆவான்.

**7. இனைத்துணைத்து என்பதொன் றில்லை விருந்தின்**
**துணைத்துணை வேள்விப் பயன்.**

இனைத்துணைத்து - இன்ன அளவுடையது ; என்பது ஒன்றில்லை - என்று ஓர் அளவில்லை ; விருந்தின் - விருந்தினரைப் பேணுதலின் ; துணைத்துணை - செய்யும் தகுதி அளவு, வேள்விப்பயன் - வேள்வி செய்தலின் பயன்.

விருந்தினரைப் பேணுதல் என்ற வேள்வியைச் செய்தலின் பயன் இன்ன அளவுடையது என்று இல்லை ; அந்த விருந்தினரைப் பேணுதல் செய்யும் தகுதி அளவே அளவாகும். எந்த அளவு விருந்தினரைப் பேணுதல் உண்டோ அந்த அளவு பயன் உண்டு.

**8. பரிந்தோம்பிப் பற்றற்றேம் என்பர் விருந்தோம்பி**
**வேள்வி தலைப்படா தார்.**

பரிந்து ஓம்பி - பொருள்களை வருந்திக் காத்து ; பற்றற்றேம் என்பர் - அவற்றை இழந்தபொழுது பற்றுக்கோடு இல்லாதவர் ஆனோம் என்று கூறுவர் ; விருந்தோம்பி - விருந்தினரைப் பேணி ; வேள்வி தலைப்படாதார் - வேள்வியாகிய விருந்தோம்பலைச் செய்யும் எண்ணமில்லாதவர்.

விருந்தோம்பல் என்னும் வேள்வியைச் செய்யும் எண்ணமில்லாதவர் வீணே பொருள்களைக் காத்துப் பின்னர் அவற்றை இழந்த பொழுது வாழ்வதற்குப் பற்றுக்கோடு இல்லாதவர் ஆனோம் என்று கூறுவர்.

**9. உடைமையுள் இன்மை விருந்தோம்பல் ஓம்பா**
**மடமை மடவார்கண் உண்டு.**

உடைமையுள் இன்மை - பொருள் இருந்தும் இல்லாமை என்னும் வறுமை; விருந்தோம்பல் ஓம்பா மடமை - விருந்தினரைப் பேணுதல் செய்யாத அறிவின்மை ; மடவார்கண் உண்டு - விருந்தோம்பலின் பயனை அறியாதாரிடம் உண்டு.

பொருள் இருந்தும் இல்லாமை என்னும் வறுமையாவது விருந்தினரைப் பேணுதல் செய்யாத அறிவின்மை ஆகும். அந்த அறிவின்மை விருந்தோம்பலின் பயனை அறியாதாரிடம்தான் உண்டு.

10. **மோப்பக் குழையும் அனிச்சம் முகம்திரிந்து**
**நோக்கக் குழையும் விருந்து.**

அனிச்சம் மோப்பக் குழையும் - அனிச்சப்பூ மோந்த நிலையிலேயே வாடிவிடும் ; முகம்திரிந்து நோக்க - முகம் மாறுபட்டு நோக்கிய அளவில் ; விருந்து குழையும் - விருந்தினர் வாட்டம் உறுவர்.

மோந்த நிலையிலே அனிச்சப்பூ வாடிவிடும் ; முகம் மாறுபட்டு நோக்கிய அளவிலேயே விருந்தினர் வாட்டம் உறுவர்; எனவே விருந்தினரை இன்முகத்தோடு நோக்க வேண்டும்.

## இனியவை கூறல்

1. **இன்சொலால் ஈரம் அளைஇப் படிறுஇலவாம்**
**செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்.**

இன்சொல் - இனிமையான சொல் ; ஈரம் - அன்பு ; அளைஇ - கலந்து ; படிறுஇலவாம் - குற்றம் இல்லாதனவாம் ; செம்பொருள் - சிறந்தபொருள் ; கண்டார்வாய்ச் சொல் - அறிந்தவர்களின் வாயிலிருந்து வெளிப்படும் சொல்.

சிறந்த பொருளை அறிந்தவர்களின் வாயிலிருந்து வெளிப்படும் சொல் அன்பு கலந்து குற்றம் இல்லாதனவாக வெளிப்படும் இனிமையான சொல் ஆகும்.

ஆல் - அசை ; அளைஇ - இசைநிறை அளபெடை.

2. **அகன்அமர்ந்து ஈதலின் நன்றே முகன்அமர்ந்து**
**இன்சொலன் ஆகப் பெறின்.**

அகன்அமர்ந்து - மனம் மகிழ்ந்து ; ஈதலின் நன்றே - ஒருவர்க்கு ஒரு பொருளைக் கொடுப்பதைவிட நல்லது ; முகன் அமர்ந்து - முகமலர்ச்சியோடு ; இன்சொலன் ஆகப் பெறின் - இனியசொற்களைச் சொல்லுபவனாகவும் இருத்தல்.

விருந்தினரைக் கண்டபோதே முகமலர்ச்சியோடு இனிய சொல்லைச் சொல்லுபவனாக ஒருவன் இருப்பது மனமகிழ்ச்சியோடு

அவ்விருந்தினர்க்கு ஒரு பொருளைக் கொடுப்பதைவிட நல்லது.

ஈதலின் - இன் ஒப்புப் பொருளில் வந்தது.

சொலன் - இடைக்குறை.

3. **முகத்தான் அமர்ந்தினிது நோக்கி அகத்தானாம்**
**இன்சொ லினதே அறம்.**

முகத்தான் அமர்ந்து - விருந்தினரைக் கண்டபோதே முகமலர்ச்சியோடு விரும்பி ; இனிது நோக்கி - இனிமையாகப் பார்த்து ; அகத்தானாம் இன் சொலினதே - மனத்தின்கள் சேர்ந்த இனிய சொல்லைக் கூறுதலே அறம்.

விருந்தினரைக் கண்டபோதே முகமலர்ச்சியோடு விரும்பி இனிமையாகப் பார்த்து மனத்தின்கண் சேர்ந்த இனிய சொல்லைக் கூறுதலே அறமாகும்.

இன்சொலினதே - ஏகாரம் தேற்றேகாரம்.

4. **துன்புறூஉம் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டும்**
**இன்புறூஉம் இன்சொ லவர்க்கு.**

துன்புறூஉம் - துன்பம் செய்யும் ; துவ்வாமை - வறுமை ; இல்லாகும் - இல்லையாகும் ; யார்மாட்டும் - யாவரிடத்திலும்; இன்புறூஉம் - இன்பத்தைத் தரும் ; இன்சொலவர்க்கு - இனிய சொல்லைச் சொல்பவர்க்கு.

யாவரிடத்திலும் இன்பத்தைத் தரும் இனிய சொல்லைச் சொல்பவர்க்கு மிகுந்த துன்பம் செய்யும் வறுமை என்பது இல்லையாகும்.

துன்புறூஉம், இன்புறூஉம் - இன்னிசை அளபெடை

5. **பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்கு**
**அணி அல்ல மற்றுப் பிற.**

பணிவுடையன் - பிறரிடம் பணிவுடையவனாதல் ; இன்சொலன் ஆதல் - இனிய சொற்களைச் சொல்பவனாதல் ; ஒருவற்கு -

ஒருவனுக்கு ; அணி - அணியாகும் ; அல்ல மற்றுப்பிற - ஏனைய பிற அணிகள் அணி ஆக மாட்டா.

பிறரிடம் பணிவுடையவனாகவும் இனிய சொற்களைச் சொல்பவனாகவும் ஆதலே ஒருவனுக்குச் சிறந்த அணியாகும். ஏனைய பிற அணிகள் அணி ஆகமாட்டா.

பணிவுடையன், இன்சொலன் - குறிப்பு வினையால் அணையும் பெயர்கள்.

**6. அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின்.**

அல்லவை - தீமைகள் ; தேய - தேய்வதால் ; அறம்பெருகும் - அறஉணர்வு பெருகும் ; நல்லவை - பிறர்க்கு நன்மை பயக்கும் இனிய சொற்களை ; நாடி - ஆராய்ந்து ; இனிய சொலின் - இனிய சொல்லைச் சொன்னால்.

பிறர்க்கு நன்மை பயக்கும் சொற்களை ஆராய்ந்து இனிய சொல்லை ஒருவன் சொன்னால் அவனுடைய தீமைகள் தேய்வதால் அறஉணர்வு பெருகி வளரும்.

தேய - செய என்னும் வாய்பாட்டு வினைஎச்சம்.

**7. நயன்ஈன்று நன்றி பயக்கும் பயன்ஈன்று
பண்பின் தலைப்பிரியாச் சொல்**

நயன்ஈன்று - நலன்களைத் தந்து ; நன்றிபயக்கும் நன்மைகளைத் தரும் ; பயன்ஈன்று - தன் பொருளால் பிறருக்குப் பயன் தந்து ; பண்பின் தலைப்பிரியாச் சொல் - இனிய சொல் சொல்லுதலாகிய பண்பிலிருந்து நீங்காத நல்ல சொல்.

தன் பொருளால் பிறருக்குப் பயன் தந்து, இனிய சொல் சொல்லுதலாகிய பண்பிலிருந்து நீங்காத நல்ல சொல் தனக்கு நலன்களைத் தந்து நன்மைகளையும் தரும்.

ஈன்று - வினை எச்சம் ; பண்பின் - இன் ஐந்தாம் வேற்றுமை உருபு ; தலைப்பிரியா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

**8. சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்
இம்மையும் இன்பம் தரும்.**

சிறுமையுள் நீங்கிய - பிறர்க்குத் துன்பம் செய்தலில்லாது நீங்கிய ; இன்சொல் - இனிய சொல் ; மறுமையும் - மறுபிறவியிலும், இம்மையும் - இப்பிறவியிலும் ; இன்பம் தரும் - இன்பத்தைத் தரும்.

பிறருக்குத் துன்பம் செய்யாத இனிய சொல் ஒருவனுக்கு மறுபிறவியிலும் வாழ்கின்ற பிறவியிலும் இன்பம் தரும்.

**9. இன்சொல் இனிதுஈன்றல் காண்பான் எவன்கொலோ
வன்சொல் வழங்கு வது.**

இன்சொல் - இனிய சொல் ; இனிது ஈன்றல் காண்பான் - இன்பம் தருவதைக் காண்பவன் ; எவன்கொலோ - எதற்காக ; வன்சொல் வழங்குவது - கடுஞ் சொற்களைக் கூறுவது.

பிறர் தன்னிடம் கூறும் இனிய சொல் தனக்கு இன்பம் தருவதைக் காண்பவன், பிறரிடத்தில் கடுஞ்சொற்களைக் கூறுவது எதற்காக? கூடாது.

**10. இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.**

இனிய உளவாக - நன்மை பயக்கும் இனிய சொற்கள் உள்ளனவாயிருக்க ; இன்னாத கூறல் - துன்பம் தரும் கடுஞ்சொற்களைக் கூறுதல் ; கனியிருப்ப - உண்ணுதற் கேற்ற கனிகள் தம்மிடம் இருக்க ; காய்கவர்ந் தற்று - துன்பம் தரும் காய்களைத் தின்பது போலாகும்.

நன்மை பயக்கும் இனிய சொற்கள் உள்ளனவாய் இருக்கும் போது, பிறர்க்குத் துன்பம் தரும் கடுஞ்சொற்களைக் கூறுதல், உண்ணுதற் கேற்ற நல்ல கனிகள் இருக்கும் போது துன்பம் தரும் காய்களைத் தின்பது போலாகும்.

கனி - நெல்லிக் கனி ; காய் - காஞ்சிரங்காய் போல்வன.

*(தொடரும்....)*

# அதிமதுர கவிகள் - 2

(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர் - நா. மீனவன்)

### மழை பொழிந்த மேகம்

பரிசாரகராய் இருந்த வரதர் அம்பிகை அருளால் மழை பொழிவது போல் கவி பாடத் தொடங்கினார். நாற்கவிராசராகத் தன் அருமைக் காதலி மோகனாங்கி இல்லம் சென்றார். அவளிடம் கவிதைபாடும் ஆற்றலைத் தேவி அகிலாண்ட நாயகி தந்த வரலாற்றைக் கூறினார் வரதர். அன்று முதல் ஆசு - மதுரம் - வித்தாரம் - சித்திரம் ஆகிய நால்வகைக் கவிதை பாடுவதில் வல்லவரானார். அம்பிகை தனக்குப் பாடும் திறமையை அருளிய நிலைக்கு நன்றிக் காணிக்கையாகத் திருவானைக்கா உலா என்ற பிரபந்தம் ஒன்றைப் பாடி மகிழ்ந்தார். அந்தப் பிரபந்தம் சொற்சுவை பொருட்சுவை ஆகியவற்றால் சிறந்து விளங்கியது. அது முதல் அவர் கவிகாள மேகம் என்று அழைக்கப் பெற்றார்.

### திருத்தலப் பயணம்

தன் அன்பிற்கினிய காதலி மோகனாங்கியுடன் சிலகாலம் வாழ்ந்து வந்த காளமேகம் தமிழகம் முழுவதும் சென்று கவிதைபாடித் தம் திறமையை வெளிப்படுத்தக் கருதினார். அக்கருத்தை மோகனாங்கியிடம் கூறி விடை பெற்றுப் பல ஊர்களுக்குச் சென்று புலவர் பலரையும் தம் கவிதையால் வெற்றி கொண்டு புகழ்க்கொடி நாட்டிப் பின்னர் அன்பான மோகனாங்கியைக் காணும் நினைவுடன் திருவானைக்கா வந்து மீண்டும் அவளுடன் இன்பமாய் வாழலானார்.

### திருமலைராயன் பட்டினம்

தஞ்சை மாவட்டம் கடற்கரையோரம் உள்ள நாகைக்குச் சிலகல் தொலைவிலே திருமலைராயன் பட்டினம் என்ற ஊர் ஒன்று இருந்தது. அதனை விஜய நகர மன்னனின் ஆட்சிக்கு அடங்கிய ஒரு சிற்றரசனாக இருந்து ஆண்டு வந்தான் ஒரு சிற்றரசன். அவன் பெயர்திருமலை ராயன் என்பதாகும். தமிழார்வம் மிக்க அவன் அவையில் தமிழ்ப்புலவர் பலர் இருந்தனர். திருமலைராயன் அவர்களைப் போற்றி அவர்கள் பல்லக்கில் ஏறிச் சென்று வரும் சிறப்பளித்துத் தண்டிகைப் புலவர்கள் என்ற விருதுப் பெயரையும் வழங்கினான். அத்தகைய

சிறப்புப் பெயர் கொண்ட புலவர்கள் 64 பேர் அவன் அவையை அலங்கரித்தனர். அரசனிடம் உதவிபெறவரும் புலவர்கள் பலரை வஞ்சகமாக மடக்கி அரசனின் பரிசில் கிடைக்காதபடி விரட்டி விடுவர்.

வறுமையில் வாடி வந்த புலவர்பலர் தண்டிகைப் புலவர்களின் சூழ்ச்சியால் தோற்று அவமானப்பட்டு அவர்களின் வஞ்சகத்தால் யாதும் பொருள் பெறாது வருத்தமுடன் செல்வாராயினர். இச்செயல் தமிழகமெங்கும் பரவியது. காளமேகப்புலவரின் செவிக்கும் இச்செய்தி எட்டியது. இவர்கள் செருக்கை அடக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் தக்க சமயத்தை எதிர்நோக்கி இருந்தார்.

### அதிமதுரகவி ராயர்

மேற் சொன்ன திருமலைராயன் அவைப்புலவர்களாக விளங்கிய தண்டிகைப் புலவர்களின் தலைவராக விளங்கியவர் அதிமதுரகவி. அவர் இனிய கவிதைகளை இயற்றும் வல்லமை பெற்றவர். அதனால் அவரை அதிமதுரகவி என்றே அரசன் அழைத்துச் சிறப்புச் செய்தான்.

இவரது சொந்த ஊர் மலையமான்களின் நாடாகிய திருக்கோவலூர் என்ற பகுதியைச் சார்ந்தது. இதனை உறுதிப் படுத்தும் ஒருபாடலில் கோவன் மதுரா என்று வருவதைக் கூறுவர். புலமை நிறைந்தவர் ஆயினும் அகந்தை உடையவராய் விளங்கினார். அரசன் அளித்த விருதுகளாலும் சிறப்புக்களாலும் இவர் அகந்தையை மேலும் அதிகப்படுத்தியது. அரசனின் அரவணைப்பு இவருக்குப் பாதுகாப்பாய் அமைய இராசனை நாடி வந்த புலவர்களை அவமானப்படுத்தி வந்தார். அதனால் இவரது செருக்கை அடக்க எண்ணினார் காளமேகப் புலவர். அப்பொழுது திருமலை ராயன் பட்டினத்தில் முத்துக் குளிக்கும் நிகழ்ச்சி தொடங்கிய நேரம்.

### முத்தை விரும்பிய மோகனா

அந்த நேரத்தில் பலதிசையிலுள்ள வணிக மக்கள் தரமான முத்துக்களை வாங்க வேண்டும் என்ற அவாவினால் அங்கு கூடுவர். அப்படி வாங்கி வந்த வணிகர் மோகனாங்கியிடம் சிறந்த முத்துக்களைக் காட்டினார். முத்துக்களின் சிறப்பைக் கண்ட மோகனா புலவரை நோக்கிப் பக்குவமான சமயம் பார்த்துத் தன் ஆசையை விளக்கினாள்.

முன்னரேயே திருமலைராயன் அவைக்குச் சென்று பாடிப் பரிசில் பெறவேண்டும் என்ற நோக்கத்துடன் இருந்த காளமேகப்புலவருக்கு இது ஒரு நல்ல வாய்ப்பாக அமைந்தது. உடனே திருமலைராயன் பட்டினம் நோக்கிப் பயணமானார் காளமேகம்.

### தமிழ்ப் புலவர்களின் தண்டிகை ஊர்வலம்

பலநாள்கள் நடந்து பல ஊர்களைக் கடந்து திருமலைராயன் பட்டினத்தை அடைந்தார். செல்வச் செழிப்புடன் தோன்றும் இல்லங்கள் வளமான சோலைகள் நிறைந்த திருமலைராயன் பட்டினம் அவருக்கு வியப்பளித்தது.

அப்பொழுது பல்லியம் முழங்க மக்கள் பலர் கூடி வாழ்த்த அலங்காரத்தோடும் ஆடம்பரத்தோடும் கூடிய பல்லக்கிலே அவைப்புலவர் ஆகிய அதிமதுர கவிராயர் பலபல்லக்குகளின் முன்னர் நடுநாயகமாக வந்து கொண்டிருந்தார். அவரைத் தொடர்ந்து 64 பல்லக்குகளில் பிற புலவர்கள் வந்து கொண்டிருந்தனர். அதிமதுரகவிராய சிங்கம் பராக் என்று கட்டியம் கூறியவாறு கட்டியக் காரர்கள் முன் வந்தனர். இப்படி வானளாவிய முழக்கத்தோடு வந்து கொண்டிருந்த அவைப்புலவர்களைக் கண்டார் காளமேகம்.

இப்படிப் புலவர் பலரை ஆதரிக்கும் திருமலைராயனின் தமிழ்ப் பற்றினைக் கண்டு வியந்தார் காளமேகம். இதனால் தம்மை மறந்த நிலையில் நடுத் தெருவில் நின்று கொண்டிருந்தார்.

### காட்டுச் சரக்கு - கூட்டுச் சரக்கு

நடுவழியில் நிற்கின்ற காளமேகப் புலவரைக் கண்ட கண்ட கட்டியக்காரன் பிற மக்களைப் போல் அதிமதுர கவிராயரின் விருதுகளைக் கூறாமல் நிற்பது கண்டு சினங் கொண்டு அவரருகே சென்று தன் கைத்தடி கொண்டு அவரைத் தட்டி அழைத்துநீயும் அதிமதுர கவிராயரின் புகழை முழங்குக என்று அதட்டினான்.

சினங்கொண்ட காளமேகம் ஏவினவன் இருக்க அம்பை நோதல் தவறு என்று உணர்ந்து

*அதிமதுரம் என்றே அகிலம் அறியத்*
*துதிமதுர மாய்எடுத்துச் சொல்லும் - புதுமைஎன்ன*
*காட்டுச் சரக்(கு) உலகில் காரமில் லாச்சரக்கு*
*கூட்டுச் சரக்(கு) அதனைக் கூறு*

என்று ஒரு செய்யுளைச் சொன்னார்.

அதிமதுரம் என்பது காட்டில் கிடைக்கும் ஒரு மூலிகைச் சரக்கு. பிற மருந்துகளுடன் கலந்துண்ணும் சரக்கு. காரமில்லாத சரக்கு. அதையா கூறுகிறாய்? என்று எள்ளற் குறிப்புடன் கூறினார். அவரும் ஒரு புலவரே என்பதை அறிந்து கொண்ட கட்டியக்காரன் உடனே அதிமதுரகவிபால் சென்று நடந்ததைக் கூறினான். அதிமதுர கவிராயரும் அவரைத் தலைகுனிய வைக்குமாறு செய்ய வேண்டும் என்று கருதிக் கட்டியக் காரனிடம் அவரைப் பற்றிய விவரங்களை அறிந்து வருமாறு அனுப்பினார்.

**வஞ்சக வலைவிரிப்பு**

அரசவையினை அடைந்த அதிமதுர கவிராயர் அரசனிடம் வரும் வழியில் ஒரு புலவன் இதுவும் ஒரு புதிய கவிராயன் சொன்ன செருக்கான செய்யுளையும் கூறி அதனைத் தண்டிகைப் புலவர்கட்கும் கூறி எப்படியும் அவரை அவைக்கு அழைத்து அவமானப்படுத்தி அனுப்ப வேண்டும் என்று கூற அரசனும் அவ்வாறே ஆகட்டும் என ஒப்புக் கொண்டான்.

**காளமேகம் அவைக்கு வருதல்**

அப்புலவரை எப்படி யேனும் கூட்டி வருக அல்லது இழுத்து வருக என்றுதம் ஏவலரைப் போக்கினான். காளமேகத்தை அழைத்துவரச் சென்ற ஏவலர்களிடம் ஒரு சீட்டுக் கவியை அதிமதுர கவிராயரிடம் கொடுக்கும்படி சொன்னார்காளமேகம். ஏவலர் கொண்டு வந்த சீட்டுக் கவியைப் படித்த அதிமதுரம் வெகுண்டு அரசனிடமும் பிறரிடமும் கூற அவர்களும் வெகுண்டனர். உடனே மறுபடியும் ஏவலரை அனுப்ப அவர்கள் காளமேகப் புலவருடன் அரசவையை அடைந்தனர். மன்னனை வாழ்த்திய காளமேகம் மரியாதை நிமித்தமாக ஓர் எனுமிச்சம் பழத்தை அரசனிடம் நீட்டினார். அதனைப் பெற்றுக் கொண்ட வேந்தன் அவரை வரவேற்று இருக்கை அளியாது இருந்தான்.

*(தொடரும்....)*

# பட்டினத்தார் பைந்தமிழ் - 3

(தமிழாகரர் தெ. முருகசாமி)
(மேனாள் முதல்வர் - இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி)

திருவெண்காட்டடிகளான பட்டினத்தார் தில்லையம்பதி ஈசன் உலக ஆன்மாக்களைத் தன் தண்ணருள் நீழலில் தங்க வைத்துக் காக்கும் சிறப்பைப் பற்றிக் கூறிய முதற்பாடலின் இறுதிச் சீரான குடை என்ற சொல்லை அடுத்த பாடலின் தொடக்கமாகக் கொண்டு பாடுகிறார்.

ஒரு பாடலின் இறுதியும் (அந்த மும்) அடுத்த பாடலின் தொடக் கமும் (ஆதி) ஒன்றாகவே அமைவதற்கு அந்தாதி என்று பெயர். இப்படிப் பாடுவதால் பாடலை எளிதில் மனப்பாடம் செய்ய முடியும். மேலும் முதற்பாடலின் முதற்சொல் நூலின் இறுதிப் பாடலின் இறுதிச் சொல்லாக அமைத்துப் பாட வேண்டும். இந்த முறைமைக்கு மண்டலித்தல் என்று பெயர். குறிப்பாக நம் பட்டினத்தார் இக்கோயில் நான்மணி மாலை முதற்பாடலைப் பூ என்று தொடங்கி நாற்பதாவது பாடலை நூலின் இறுதிப் பாடலைப் பூவடிக்கே என முடித்துள்ளார்.

**குடைகொண்(டு) இவ் வையம் எலாம்குளிர்**
**வித்(து)எரி பொன்திகிரிப்**
**படைகொண்(டு) இகல்தெறும் பார்த்திவர்**
**ஆவதில்பைம் பொன்குன்றைத்**
**தொடைகொண்ட வார்சடை அம்பலத்**
**தான்தொண்டர்க்(கு) ஏவல்செய்து**
**கடைகொண்ட பிச்சைகொண்(டு) உண்(டு) உண்(டு) இங்கு**
**வாழ்தல் களிப்புடைத்தே**

இரண்டாம் பாடலான இக்கட்டளைக் கலித்துறையில் அரச வாழ்வைக் காட்டினும் சிவனடியார்களுக்குத் தொண்டு செய்து வாழ்தல் சிறப்புடையது என்கிறார்.

அரச வாழ்வு எப்படிப்பட்ட தெனில் தன் ஒளி பொருந்திய ஆட்சிச் சக்கரத்தால் பகைமைகளை அழித்து மக்களைக் காக்கும் நிலையில் பல தொல்லைகளை அனுபவிக்க வேண்டும். ஏகபோகமான அமைதியான

வாழ்வன்று என்பதை இளங்கோவடிகள் கீழ்க்கண்டவாறு அரச வாழ்வின் கவலைகளைப் பதிவு செய்கிறார்.

**மழைவளம் கரப்பின் வான்பேர் அச்சம்**
**பிழைஉயிர் எய்தின் பெரும்பேர் அச்சம்**
**குடிபுரவு உண்டும் கொடுங்கோல் அஞ்சி**
**மன்பதை காக்கும் நற்குடிப் பிறத்தல்**

துன்பம் அல்லது தொழுதகவு இல்லன (சிலப் - காட்சி 100 பா) இன்பம் வந்தால் அது அரசனால் வந்ததெனப் போற்றாத உலகம் துன்பத்திற்கு எல்லாம் அரசே காரணம் எனத் தூற்றுவதே இயல்பு என்கிறார் இளங்கோ.

**மாநிலம் காவலன் ஆவான் மன்உயிர் காக்கும் காலை**
**தான் அதனுக்(கு) இடையூறு தன்னால்தன் பரிசனத்தால்**
**ஊனம்மிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்கள்**
**தம்மால்**
**ஆனபயம் ஐந்தும் தீர்த்(து) அறங்காப்பான் அல்லனோ?**

எனச் சேக்கிழாரும் ஆளுதல் என்பது அரிதினும் அரிது என்பதாகக் கூறுகிறார்.

எனவே வழிவழியான அரச வாழ்வின் பழிகளை உணர்ந்த பட்டினத்தார் ஒன்றுமில்லாத சுற்றப் பற்றால் தொல்லையில்லாத சிவனடியார்கட்குக் குற்றேவல் செய்து வாழும் வாழ்வே உயர்ந்தது என்கின்றார். இதில் வெறும் அடியாராகப் பிச்சையேற்று வாழ்தலாகக் கூறாமல் அம்பலக் கூத்தனின் அடியார்கட்குக் குற்றேவல் செய்ய ஆசைப்படுவதாகக் கூறுவதால் தோன்றி மறையும் அரசாளும் வாழ்வினும் மரணமிலாப் பெருவாழ்வுடைய அடியார் கட்குக் குற்றேவல் செய்வது மேலானது எனக் கருதுகிறார் பட்டினத்தார்.

இப்பாடல் இருவேறு அரசர்களைச் சுட்டுகின்றது. ஒருவர் பாராளும் பார்த்திபராகிய அரசர்; மற்றொருவர் அம்பலத்தரசர். இவ்விருவரில் நிரந்தர மானவர் யார்? என்பதைப் பட்டினத்தார் நுட்பமான ஒரு சொல்லால் குறித்துள்ளார்.

பொதுவாக அரசர் என்றால் திருமுடி தரித்திருப்பார். ஆனால் எல்லாம் உடைய பாராளும் வேந்தரின் திருமுடி பற்றிய குறிப்பைக் கூறாது அம்பலத் தரசரின் வார்சடையைக் கூறினார். ஏனெனில் மன்னர்க்கோ ஏனையத் தெய்வங்கட்கோ திருமுடி என்பது நிரந்தரமாகத் தலையிலேயே இருப்பதான ஒன்று அன்று. தேவைப்பட்ட போது மட்டுமே அது தலையை அலங்கரிக்கும்.

ஆனால் அம்பலத்தரசனுக்குத் திருமுடி என்பது சடையாகும். அதாவது சடையே திருமுடி.திருமுடியே சடை; அதைத் தேவைக்காகப் பிறர் போல எடுத்து வைத்துப் பின்னர் அணிந்து கொள்வதான ஒன்றன்று. இதைத்தான் மணிவாசகர் வெள்ளந்தாழ் விரிசடையாய்! என்றார். இச்சிறப்பின் காரணமாகவே சிவபெருமானுக்குத் தலையலங்காரப் பிரியன் என்றசிறப்பைக் குறிக்கும் பிஞ்ஞகன் என்ற சிறப்புப் பெயர் உண்டு.

இங்ஙனம் அரசாட்சியின் கவலையையும் திருமுடியின் நிலையிலாச் சிறப்பையும் பட்டினத்தார் அரசருக்குக் கூறி இத்தகு குறைகள் இல்லாதவராகிய அம்பலத்தரசரின் அடியார்களுக்குக் குற்றேவல் செய்ய விரும்பியதாகப் பிரகடனப் படுத்தியது அரச வாழ்வினும் ஆன்மீக வாழ்வு சிறந்தது என்பதைச் சுட்டவே ஆகும். பட்டினத்தாரைப் போலவே சிவப்பிரகாசசுவாமிகள் தாம் பாடிய சோணசைல மாலையில்

**குருமணி மகுடம் புனைந்(து) உல(கு) ஆளும்**
**கொற்றவர் ஆதலின் என்கண்**
**கருமணி எனும்நின் தொண்டர்குற் றேவல்**
**கருதியாட் பட்டிடல் இனிதே**

என்றார்; இவ்வாறே வடலூர் வள்ளலாரும்

**எத்துணையும் பேதம்உறா(து) எவ்உயிரும்**
**தம்உயிர்போல் எண்ணி உள்ளே**
**ஒத்(து) உரிமை உடையவராய் உவக்கின்றார்**
**யாவர்அவர் அவர் உளந்தான்**

சுத்தசித்(து) உருவாய் எம்பெருமான்
நடம்புரியும் இடம்எனநான் தேர்ந்தேன் அந்த
வித்தகர்தம் அடிக்(கு)ஏவல் புரிந்திடஎன்
சிந்தைமிக விழைந்த தாலோ

என்றார். இங்ஙனம் அருளாளர்கள் அரச வாழ்வை வெறுத்து அடியார் வாழ்வை விரும்பியதால் அடியாரையே ஆண்டவனாகப் போற்றும் சித்தாந்த உண்மையை வெளிப்படுத்தினார் பட்டினத்தார் என்பது கருத்து. சிவஞான போதம் 12 ஆம் நூற்பாவில் மாலற மலிந்தவர் வேடமும் என மெய்கண்டார் கூறுவதால் அடியார் பக்தி ஆண்டவர் பக்திக்குச் சமம் என்பதாகும்.

இங்ஙனம் அடியார்க்குத் தொண்டு செய்வதைக் கூறியவர் மூன்றாம் பாடலில் அடியாரை எல்லாம் ஆட்கொள்ளும் இறைவன் கூத்தாடும் இடமான தில்லைதான் வெளிக்கு வெளியாய பேரம்பலம் ஆகும் என்கிறார். அத்தகு பேரம்பலத்தில் விரிந்த சடையுடன் செக்கச் சிவந்த செவ்வான நிறமேனியில் திருவெண்ணீறு அணிந்து என் உள்ளத்தும் ஆடுகின்றான் என்று புகழ்ந்து கூறுவதல்லாமல் பிறரைப் பொய்யாகப் புகழ்ந்து உரைத்து வாழ மாட்டேன் என உறுதியாக மொழிகிறார் பட்டினத்தார்.

இறை ஒன்றே மெய்ப்பொருள்; பிறயாவும் பொய்ப் பொருள் என்பதால் பொய்ம்மையாளரைப் பாடாதே எந்தை புகலூர் பாடுமின் புலவீர்காள்! என்ற சுந்தரரின் திருவாக்கிற்கொப்பப் பொய்யானவரைப் பாட மறுத்தார் பட்டினத்தார் என்பதே கருத்து. இன்றைய உலகம் பொய்யாளரையே புகழ்ந்து வாழ்கின்றது. அந்நோய்க்கான தீர்வாகப் பட்டினத்தாரின் இப்பாடல் உள்ளது எனலாம்.

வாழ்தல் வேண்டிப் பொய்கூறேன் எனப் புறநானூற்றில் மருதன் இளநாகனார் என்னும் புலவர் பாடினாலும் பொய் கூறாரோ எனப் பிறர் ஐயுறாதபடி மேலும் கூறுகையில் மெய் கூறுவல் என்றார்.

அதுபோலப் பட்டினத்தாரும் பிறர்பால் சென்று பொய் உரையோம் என்பதாக மட்டும் கூறாமல் பொய் உரைக்கும் போதுள்ள போலியான

புனைவுகளையும் பிறர் இச்சிக்குமாறு உரைத்துக் கூறியதைச் சாதித்து ஏற்றுக் கொள்ளுதலைக் கடிந்துரைக்கும் விதமாக

**எளிவந்(து) இனிப்பிறர்பால் சென்றவர்க்குப் பொய்கொண்டு**
**இடைமிடைந்த புன்மொழியால் இச்சை உரையோமே**

என்கிறார். இங்ஙனம் கூறக் காரணம் உண்டு; மறந்தும் பொய் கூற நேர்ந்து விட்டால் அதனைத் திருத்திக் கொள்ள முனைய வேண்டுமேயன்றி அதையே சாதித்து நியாயப்படுத்தக் கூடாது என்பது பட்டினத்தார் கருத்தாக உள்ளது என உணர்தல் வேண்டும்.

ஆக அடியார் பத்தியும் ஆண்டவனின் புகழ்ச்சியும் ஒவ்வொருவருக்கும் தேவை என்பதே மேற்கண்ட இருபாடல்கள் கூறும் கருத்துக்களாம் என்க.

*(தொடரும்....)*

## மடாலய நிகழ்வுகள்

### கோவிலூரில் தொழில் முனைவோர் மாநாடு (3.11.2016)

நகரத்தார்கள் பர்மா, இலங்கை, மலாயா, சிங்கப்பூர், தாய்லாந்து போன்ற நாடுகளுக்குச் சென்று வணிகம் செய்து பெரும்பொருள் ஈட்டிப் பல சமூகப் பணிகள் செய்தனர். ஆனால் இன்றைய இளைய சமூதாயம் வேலைக்குச் செல்வதையே விரும்புகிறது. எனவே மீண்டும் தொழில் துவங்கவும் பொருள் ஈட்டிச் சமூகப் பணிகளைத் தொடரவும், வேலை வாய்ப்பு அளிக்கவும் விழிப்புணர்வை ஏற்படுத்தி ஊக்கப்படுத்த உலக அளவில் ஐ.பி.சி.என் எனும் உலக நகரத்தார் வர்த்தகக் கூட்டமைப்பு ஏற்படுத்தப்பட்டுள்ளது. இதன் 3ஆவது மாநாடு 1917ஆம் ஆண்டு ஏப்ரல் 14 முதல் 16 முடிய துபாயில் நடைபெற உள்ளது. இம்மாநாடு குறித்து விழிப்புணர்வுக் கருத்தரங்கு கோவிலூரில் நடைபெற்றது. கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் ஆசிகூறிக் கருத்தரங்கைத் துவக்கி வைத்தார்கள். ஐ.பி.சி.என் 2017ன் தலைவர் அண. சொக்கலிங்கம் மாநாட்டின் நோக்கங்கள் குறித்துப் பேசினார்.

ஒருங்கிணைப்புக் குழுத் தலைவர் அழ.முருகப்பன் வரவேற்றார். அழ.காசிவிசுவநாதன் மாநாடு தொடர்பாக நடைபெற உள்ள பல்வேறு போட்டிகள் குறித்துப் பேசினார். ஞானசம்பந்தம், சிதம்பரம் ஆகியோர் துபாயில் மாநாடு நடைபெறும் இடம், பதிவுசெய்யும் முறை குறித்துப் பேசினர். முதலாவது மாநாடு சிங்கப்பூரிலும், 2வது மாநாடு கோவையிலும் நடைபெற்றது. 3வது மாநாடு துபாயில் நடைபெற உள்ளது. திருச்சி, மதுரை, சேலம், திருப்பூரை அடுத்துப் கோவிலூரில் விழிப்புணர்வுக் கருத்தரங்கம் நடைபெற்றது. தொழில் துவங்க வழியாயிருத்தல் நிதி உதவி, ஊக்குவிப்பு செய்யத்திட்டமிட்டுள்ளது ஐ.பி.சி.என் அமைப்பு.

இக்கருத்தரங்கில் கோவிலூர் மடாலய மக்கள் தொடர்பு அலுவலர் டாக்டர். குமரப்பன், பட்டிமன்றப் பேச்சாளர் கண.சிற்சபேசன், காரைக்குடி தொழில் வணிகத்தலைவர் முத்துப்பழனியப்பன், இளைஞர் காங்கிரஸ் தலைவர் ஒய். பழனியப்பன், தேவகோட்டை நகரத்தார் பள்ளியின் செயலாளர் ராமனாதன் ஆகியோர் கலந்து கொண்டனர்.

### கோவிலூர் குழந்தைகள் தின விழா (14.11.2016)

கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்கள் சார்பில் குழந்தைகள் தினவிழா நடைபெற்றது. கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் தலைமைவகித்து ஆசியுரை வழங்கினார். பட்டிமன்றப் பேச்சாளர் பேரா. கண. சிற்சபேசன், குழந்தை இலக்கியத்திற்காகச் சாகித்ய அகாடமியின் பாலபுரஷ்கர் விருதுபெற்ற கவிஞர் செல்ல கணபதி ஆகியோர் குழந்தைகள் தினவிழா உரை ஆற்றிக் குழந்தைகள் தின விழாவை முன்னிட்டு நடத்தப்பெற்ற பல்வேறு போட்டிகளில் வெற்றி பெற்றவர்களுக்குப் பரிசுகளை வழங்கினர். குழந்தைகள் அனைவரும் உறுதிமொழி எடுத்துக்கொண்டனர். குழந்தைகளின் கலை நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

குழந்தைக் கவிஞர் பால நடராஜன் வாழ்த்துரை வழங்கினார். கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் மேல்நிலைப் பள்ளி முதல்வர் மணிமொழி மோகன் வரவேற்றார். முத்துராமலிங்க ஆண்டவர் தொடக்கப்பள்ளி முதல்வர் மணிமொழி முருகன் நன்றி கூறினார். கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர் குமரப்பன், மடாலய அறநிலை உறுப்பினர் ராமனாதன், ஜமீந்தார் ராமகிருஷ்ணன், கல்லூரி முதல்வர்கள் டாக்டர் செல்லப்பா, மாயாண்டி, முன்னாள் ஊராட்சித் தலைவர் அழகப்பன், ஓவியர் ஆவுடையப்பன் ஆகியோர் கலந்துகொண்டனர்.

## செட்டிநாடு பாரம்பரிய அருங்காட்சியகத்திற்குப் பள்ளி மாணவர்கள் வருகை (14.11.2016)

செட்டிநாடு பற்றிய பல்வேறு தகவல்களை அறிந்துகொள்ளும் பொருட்டுக் கானாடுகாத்தானில் உள்ள சிவி.சிடி.வி. மீனாட்சி ஆச்சி மெட்ரிகுலேசன் பள்ளி மாணவர்கள் கோவிலூர் மடாலயத்தில் உள்ள செட்டிநாடு அருங்காட்சியகத்திற்கு வருகை புரிந்தனர். அருங்காட்சியகத்தில் வைக்கப்பட்டிருந்த செட்டிநாட்டின் வரைபடம், 9 நகரக் கோவில்கள், நகரத்தார் தோற்றம், வரலாறு பத்மவிருதுபெற்ற நகரத்தார், தபால் தலையில் இடம் பெற்ற நகரத்தார், செட்டிநாட்டு பாரம்பரியங்கள், பயன்படுத்திய பொருட்கள், செட்டிநாட்டிலிருந்து வெளிவந்த பத்திரிக்கைகள், சென்று வந்த நாடுகள், அந்நிய நாடுகள் கட்டப்பெற்ற கோவில்கள், செட்டிநாட்டில் உள்ள பழங்கால நாணயங்கள், ரூபாய் நோட்டுகள், விழாக்கள், மழைநீர் சேகரிப்புப் பற்றி அறிந்து கொண்டனர். கோவிலூர் மடாலய மக்கள் தொடர்பு அலுவலர் டாக்டர் குமரப்பன் மாணவர்களுக்கு, செட்டிநாடு பாரம்பரியம் குறித்து விளக்கினார். கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் மாணவர்களிடையே உரையாற்றி ஆசி வழங்கினார். பின்னர் திருநெல்லை அம்மன் கோவில் மற்றும் நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியில் உள்ள படப்பிடிப்புத்தளம், ஒலிப்பதிவு, படத்தொகுப்புக் கூடங்களைப் பார்வையிட்டுச் சென்றனர்.

கானாடுகாத்தான் பள்ளி நிர்வாக அலுவலர் திருமதி லட்சுமி தலைமையில் ஆசிரியைகள் மாணவர்களை அழைத்து வந்திருந்தனர்.

மீண்டும் 18.11.2016 அன்று மேற்கண்ட கானாடுகாத்தான் பள்ளியிலிருந்து மாணவர்களும் ஆசிரியர்களும் அருங்காட்சி -யகத்தைக் காண வந்திருந்தனர். அன்று பிற்பகல் மதுரை ஜெயின் வித்யாலயா மெட்ரிகுலேசன் பள்ளியிலிருந்து 35 மாணவர்கள் மற்றும் ஆசிரியர்கள் அருங்காட்சியகத்தைக் காணவந்தனர்.

19.10.2016 அன்று கண்டனூர் சிதம்பர சுவாமிகள் குருபூஜையும்

20.10.2016 அன்று சின்ன அழகப்ப அய்யா குருபூஜையும்

25.10.2016 அன்று கீழப்பூங்குடி நாராயண சுவாமிகள் குருபூஜையும்

29.10.2016 அன்று சிதம்பரம் பொன்னம்பல சுவாமிகள் குருபூஜையும்

6.11.2016 அன்று சொர்ணநாதபுரம் பழனியப்ப அய்யா குருபூஜையும் சிறப்பாக நடைபெற்றன.

22.10.2016 அன்று டாக்டர். கரு. முத்தையா இலக்கியப்பூங்கா நிகழ்ச்சியில் திருஞான சம்பந்தர் பற்றி நான்காவது மற்றும் நிறைவுச் சொற்பொழிவு ஆற்றினார்.

**அட்டையில் : இடமிருந்து வலம்**

**முன் வரிசை** - திரு. பாலநடராஜன், திரு. கண.சிற்சபேசன், கோவிலூர் ஆதீனம், திரு. செல்லக் கணபதி, டாக்டர். சே.குமரப்பன்

**பின் வரிசை** - திருமதி. மணிமொழி முருகன், திருமதி. மணிமொழி மோகன், ஓவியர் ஆவுடையப்பன், திரு. அழகப்பன், டாக்டர். செல்லப்பா, திரு. மாயாண்டி.

# இரங்கல் செய்தி



பாடியநல்லூர் தீர்க்கதரிசி தியாகராஜ சுவாமிகள் அகால மரணம் அடைந்தது வேதாந்தம் கற்கின்ற மாணவர்கள்,வேதாந்திகள் மத்தியில் பெரிய இழப்பை ஏற்படுத்தி இருக்கிறது. ஆன்மீகச் செம்மல் தியாகராஜன் அவர்கள் பலவழியாகவும் வேதாந்தத்திற்கு, குறிப்பாக, கைவல்ய நவநீதத்தைப் பரப்புவதற்குப் பெரும் உழைப்பை வழங்கியவர்கள். கணபதி பதிப்பகம் என்ற அமைப்பின் மூலம் ஏறக்குறைய 110 நூல்களை வெளியிட்டு வேதாந்த மாணவர்களுக்கும் வேதாந்த அமைப்புகளுக்கும் இலவசமாக வழங்கியவர்கள். எந்தக் காரியத்தை ஒப்புக் கொண்டாலும் அதனைக் கைப்பொருள் செலவுடன் முழுமையாகச் சிறப்புடன் செய்து முடிக்ககின்ற நல்ல உழைப்பாளி. பொதுவாக நல்ல ஆன்மாவை இழந்து வருந்துகிறோம். நம்முடைய கோவிலூர் மடாலயத்துடன் தியாகராஜனுடைய தொடர்பு இரண்டு ஆண்டுகள் மட்டுமே. அந்தக் குறுகிய காலத்திற்குள் நமது மடாலயத்தைச் சேர்ந்த அனைவரின் நெஞ்சிலும் நீங்கா இடம் பெற்றவர் தெய்வத்திரு.தியாகராஜன் அவர்கள். அன்னாரின் ஆன்மா சாந்தி அடைய நம்மடாலயத்தினைச் சார்ந்த அனைவரும் பிரார்த்திக்கின்றோம்.

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**

# நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி

(இருபாலாருக்கும்)

(அழகப்பா பல்கலைக் கழக இணைவு பெற்றது)
(அரசு அனுமதி பெற்றது)

கோவிலூர் – காரைக்குடி – 630 307.

தொலைபேசி : 04565 - 234 523 கைபேசி : 94435 02017

**பயிற்றுவிக்கப் பெறும் பாடப் பிரிவுகள்:**

- B.A., Tamil
- B.A., English
- B.Com.,
- B.Com.(C.A).,
- B.B.A.,
- B.Sc., Maths
- B.Sc., Computer Science
- B.Sc., Visual Communication
- B.Sc., Physical Education

**B.Sc. Visual Communication.,**
(அழகப்பா பல்கலைக்கழகப் பகுதியில் முதன் முதலாகத் தொடங்கப்பட்டுள்ள வகுப்பு)

திரைக்கதை, வசனம் எழுதுதல்,
ஒளிப்பதிப்பு, ஒலிப்பதிவு , படத்தொகுப்பு,
இயக்கம், செய்தி தயாரித்தல், தொகுத்தல்
போன்ற பல துறைகளில் பயிற்சி பெற அரிய வாய்ப்பு !!